

# தீண்டாமை ஒழிப்பு

ஆசிரியர்

## டாக்டர் சேப்பன்

தமிழில்

அழைப்பு, வழிகாட்டல், வெளிநாட்டவர் அழைப்பு மையம்,
ஓல்ட் சினாஇய்யா, த.பெ. இல:265018, ரியாத்:11858,

# அணிந்துரை

—கலைமாமணி அடியார்

போற்றுதலுக்கும் பாராட்டுதலுக்குமுரிய டாக்டர் சேப்பன் அவர்கள் எழுதிய தீண்டாமை ஒழிப்பு எனும் புத்தகம் சிந்தனையைத் தூண்டுவதுதான்.

ஆனால் சிந்தனையே இல்லை இவர் கூறும் மக்களுக்கு என்பது தான் உண்மை! அப்படியே சிந்தனை வந்தாலும் தன் வீடு, தன் பிள்ளை, தன்னலம் என்கிற சிந்தனைதான்!

தீண்டாமை என்பது பட்டியல் சாதி (ஷெடீட்டியூல்டு காஸ்ட்) மீது காட்டப்படுவது மட்டுமில்லை! சாதிகள் இல்லையடி பாப்பா என்று பாடிய பாரதியார் வரிகள் சத்யகாலி நகரில் தங்களது வீட்டை பிராமணர்களுக்கு மட்டுமே (பிராமின்ஸ்-ஒன்லி) என்று ஒதுக்கீடு பேசுகிறார்கள்.

தீண்டாமை முன்பு எப்படி இருந்தது? மாடு தின்னும் புல்லையா! உனக்கு மார்கழித் திருநாளா? —என்று வேதியர் கேட்டார். இப்போது வேளாளர் கேட்கிறார்; வன்னியர் கேட்கிறார் மற்ற மேற்சாதிகள் கேட்கின்றன. ஆனால் இவர்கள் "ஆடு தின்பவர்கள்"! ஆடு —மாட்டைப் பார்த்து தீண்டாதே; எட்டி நில் என்கிறது. இதே சமயம் மாடு தின்று – மலம் கழித்தபின் காகிதத்தில் துடைத்துக் கொள்ளும் வெள்ளைக் காரியைக் கட்டிப் பிடித்து முத்தம் முன்னூறு தர அடிமன ஆசை அவர்களுக்கு!

இந்தப் போலிகளைக் கதி கலங்க வைப்பதுதான் "மதமாற்றம்"! அவர்கள் கதி கலங்கினால் என்ன? மதி மயங்கினால் என்ன? பட்டியல் சாதியினருக்கு பூரணவிடுதலை தருவது அது! —என்கிறார் டாக்டர் சேப்பன்.

தென்னாட்டில் மத மாற்றம் சேரமான் பெருமான் என்ற சேர மன்னன் காலத்திலேயே அமுலுக்கு வந்து விட்டது. 1900 ஆம் ஆண்டு மதம் மாற்றுவதற்கு உரிமம் (லைசென்ஸ்) பிரிட்டிஷ் அரசாங்கத்தால் பொன்னானி இஸ்லாமிய நிறுவனத்துக்குத் தரப்பட்டது. அன்றிலிருந்து இன்றுவரை 95 ஆண்டு காலம் அங்கே மதமாற்றம் நடந்து வருகிறது.

மதமாற்றம் என்பது நமக்கு இருக்கும் உரிமை. இந்திய அரசியல் சட்டத்தில் அடிப்படை உரிமைகள் என்ற பகுதி இருக்கிறது. அதில் கூறப்பட்டிருப்பது யாதெனில்

***இந்தியக் குடிமகன் ஒவ்வொருவருக்கும் தான் விரும்பும் எந்த மதத்தையும் பின்பற்றலாம்.**

***தான் விரும்புகிற மதத்தைப் பற்றிப் பிரச்சாரம் நடத்தலாம்.**

இதை அறிந்தால் எந்த அதிகாரியோ கட்சிக்காரரோ இந்த மதமாற்றத்தை எதிர்த்துப்பேச அதிகாரமில்லை! ஆகவே மதமாற்றம் ஆட்ட முடியாத அசைக்க முடியாத சட்டத்தின் பாற்பட்ட உரிமை!

டாக்டர் சேப்பன் எந்த மதத்திற்கு மாறுவது? என்பதைப் பற்றி இந்தப் புத்தகத்தில் விவாதிக்கிறார். இந்து மதத்தைவிட்டு கிருஸ்துவ மதம் – சீக்கிய மதம் – பவுத்த மதம் என்று எங்கு போனாலும் சாதி அவமதிப்பு – தீண்டாமை தொடர்கிறது என்று அழகாக வாதாடுகிறார்.

இஸ்லாம் சிறந்தது என்பதற்கு அவர் கூறும் காரணத்தோடு 'பெண் கொடுத்து பெண் எடுத்து கலாச்சாரத்தை மாற்றி விடுகிறது. பிறக்கும் குழந்தைகளின் உடல் வாடையை மாற்றுகிறது. அதுவே இஸ்லாம் சிறப்பு

-- அடியார்.

# முன்னுரை

அறிஞர்கள் – புலவர்கள் –கவிஞர்கள் தேவையற்ற பொருள் பற்றி நாள் கணக்கில் கருத்தரங்குகளும் விவாதங்களும் நடத்திக் கொண்டிருக்கிறார்கள். ஆனால் "தீண்டாமை ஒழிப்பு" பற்றி கருத்தரங்கு நடத்துவதற்கோ பரிகாரம் காண்பதற்கோ இந்த நாட்டில் ஒருவனுக்கு கூட சிந்தனை இல்லை. காரணம் நல்ல சிந்தனையுடைய மனித நேயர்கள் இல்லை.

தீண்டப்படாத மக்களில் பல தலைவர்கள் தீண்டாமை ஒழிப்பிற்காக பல்வேறு கோணங்களில் செயல் பட்டார்கள். ஆனால் பாபாசாஹிப் அம்பேத்கர் அவர்கள் –தீண்டாமை ஒழிவதற்கு நிரந்தர வழியை காண்பித்தார்கள்.

**அதுதான் மத மாற்றம்**

மதமாற்றத்தின் மூலமே தீண்டப்படாத மக்கள் பூரண விடுதலை பெற முடியும். குறிப்பாக இந்து மதத்திலிருந்து வெளியேறுவது ஒவ்வொரு தீண்டப்படாதவனின் –பிறப்புரிமையும் – சுயமரியாதையுமாகும். அந்த உணர்வு இல்லாத செடியூல்டு இனமக்கள் "மனிதர்கள்" என்று கூறிக் கொள்வதற்கு தகுதியற்றவர்கள் என்றே கூற வேண்டும்.

மேலும் பல ஆயிரம் ஆண்டுகளாக ஒரு பெரும் சமூகமக்கள் தொடர்ந்து "தீண்டப்படாதவர்களாக" நடத்தப்படுவதற்கு இந்துமதம்தான் நூற்றுக்கு நூறு காரணம் என்பது உண்மையாகும். ஆனால் இந்து மதத்திலுள்ள தீண்டாமை எனும் கொடிய நோயை ஒழிப்பதற்கு இந்து மத தலைவர்கள் எவருமே அக்கரை எடுத்துக் கொள்ளவில்லை.

ஆகவே தீண்டாமை ஒழிப்பிற்கு தீண்டப்பாடாத மக்களே வழி கண்டு செயல்படுவதுதான் புத்திசாலித்தனமாகும்.

தீண்டாமை ஒழிய தீண்டப்படாத மக்கள் –இந்து! மதத்தைவிட்டு வெளியேறியாக வேண்டும். அதுமட்டுமல்ல

தீண்டாமையை வளர்த்துவரும் கொடிய விஷ ஜந்துவாகிய இந்து மதத்தை ஒழித்து அதன் வாடையும் வரலாறும் இல்லாது செய்தாக வேண்டும். இந்த அத்தியாவசிய காரியத்தை எப்படி வேண்டுமானாலும் செய்யலாம்.

எனவே நான் தீண்டாமை ஒழிப்பு பற்றி பல கூட்டங்களில் பேசிய கருத்துக்களை நூல் வடிவில் அமைக்க வேண்டுமென நண்பர்கள் கேட்டுக் கொண்டதற்கிணங்க படிப்போர்க்கு எளிதாக இருக்கும் வகையில் சுருக்கமாக அமைத்துள்ளேன்.

"அடிபட்டவனுக்குத்தான் வேதனை உணர முடியும்" என்பது போல தீண்டாமை கொடுமைகளை அனுபவித்தவன் அனுபவித்துக் கொண்டிருக்கும் சமூகத்தில் வாழ்பவன் என்பதால் "எப்படியாவது தீண்டாமை ஒழிக்கப்பட வேண்டும்" என்ற நோக்கத்தில்தான் எனது கருத்துக்கள் உள்ளனவே தவிர யாருடைய மனதையும் புண்படுத்த வேண்டும் என்ற எண்ணம் எனக்கு அணுவளவும் இல்லவே இல்லை.

இந்நூலை வெளியிடுகின்றபோது நான் ஒரு எழுத்தாளனாக தொடர்வதற்கு ஊக்குவித்த எனது பாசமிகு அண்ணன் கலைமாமணி இலக்கியத் தென்றல் அடியார் அவர்களுக்கு எனது நன்றியை தெரிவித்துக் கொள்கிறேன்.

மேலும் இந்த சிறு நூலுக்கு அணிந்துரை வழங்கி உயிர் ஊட்டிய பெருமை அண்ணன் அடியார் அவர்களையே சாரும். அவர்கள் அணிந்துரை வழங்கியது எனது பாக்கியம் என்றே கருதுகிறேன்.

இந்நூல் அச்சிட்டு வழங்கிய அச்சகத்தார் அவர்களுக்கும் எனது நன்றியை தெரிவித்துக் கொள்கிறேன்.

சென்னை-6 டாக்டர் அ. சேப்பன் M.B.B.S.,

1.2.95

# தீண்டாமை ஒழிப்பு

இருபதாம் நூற்றாண்டின் இறுதியில் –இந்தியா சுதந்திர மடைந்து 47 – ஆண்டுகள் கடந்த நிலையில் "தீண்டாமை" "தீண்டாமை ஒழிப்பு" என்ற தலைப்பு பற்றி நினைப்பதற்கே வெட்கப்பட வேண்டும். உலகில் விஞ்ஞானத்தின் வளர்ச்சி உச்ச கட்டத்திலிருப்பதை காண்கிறோம். சந்திரமண்டலத்தில் பிளாட்போட்டு விற்பனை செய்வதற்கு பலர் திட்டம் தீட்டிக் கொண்டிருக்கிறார்கள். சாதாரண கூக்கிராமத்திலிருந்து உலக நாடுகளோடு ஒரு கணத்தில் தொடர்பு கொள்ள முடிகின்றது. இந்தளவுக்கு விஞ்ஞானம் வளர்ந்துள்ள நாளில் நாம் "தீண்டாமை" பற்றி பேசுவதற்கு வெட்கப்பட வேண்டுமல்லவா? மேலும் இந்தியாவில் "தீண்டாமை" நிலவுகின்றது "தீண்டப் படாதவர்" என்றொரு பிரிவு மக்கள் "சேரி" –"காலனி" என்ற ஒதுக்குப்புறத்தில் ஒதுக்கி வைக்கப்பட்டிருக்கிறார்கள் என்பது பற்றி இந்த நாட்டின் ஜனாதிபதி – பிரதமர் – அமைச்சர் பெரு மக்கள் –பாராளுமன்ற –சட்டமன்ற உறுப்பினர்கள் மற்றும் அறிஞர்கள் –கவிஞர்கள் கலைஞர்கள் புலவர்கள் யாருமே சிந்திப்பதில்லை. ஆனால் அவர்கள் அனைவரும் தீண்டப் படாத மக்களின் ஓட்டுக்களை பெறுவதற்கும் அவர்களை கோஷம் போட்டு கூத்தாட வைப்பதற்கும் தவறுவதில்லை.

# இந்து மதமும் தீண்டாமையும்

"நாமெல்லாம் –இந்து" என கூச்சல் போடுகின்ற இந்து முன்னணி –ஆர்.எஸ்.எஸ். – அவர்களின் அரசியல் ஆயுதம் பி.ஜே.பி. போன்ற அமைப்பைச் சார்ந்தவர்கள் தீண்டாமை

எனும் மிகவும் கேவலமான ஒரு நோய் இந்து சமுதாயத்தில் அழிக்கப்படாமல் இருப்பது பற்றி அக்கரை எடுத்துக் கொள்வதில்லை. நாமெல்லாம் இந்துவாக இருப்பதில் எனக்கு ஆட்சேபணை இல்லை. நான் வேண்டாம் என்றும் கூறவில்லை. ஆனால் "இந்து என கூறிக் கொண்டு இந்துக்களால் தீண்டப்படாதவன்" என அழைக்கப்படுவதை எப்படி தாங்கிக் கொள்ள முடியும்?

நானும் ஒரு இந்து என்பதை மனப்பூர்வமாக ஏற்றுக். கொண்டால் இந்து சமுதாயத்தில் நானும் ஒரு மதிக்கத்தக்க மனிதனாக நடத்தப்பட வேண்டும். நான் மற்றவர்களைப் போல மனிதனாக நடத்தப்படவில்லையெனில் நான் எப்படி 'நானும் ஒரு இந்து' என கூறிக் கொள்ள முடியும்?

இவ்வளவு கொடுமைகளுக்குப் பின்னும், தாங்கொனா இழிநிலைகளுக்குப் பின்னும், உலகில் எந்த சமுதாயமும் அனுபவிக்காத அவமானங் களுக்குப் பின்னும் பழங்குடி இனமக்களாகிய செடியூல்டு இனத்தவர்கள் தங்களை "இந்து" எனக் கூறிக் கொண்டால் அவர்களுக்கு "சூடு சொரணையே" இல்லை என்றுதான் பொருள்.

படிக்காத அப்பாவி மக்களைப் பற்றி கவலை இல்லை. ஆனால் படித்தவர்கள் பட்டம் பெற்றவர்கள் உயர் பதவியில் இருப்பவர்கள் தெளிவாக விபரம் புரிந்து –செடியூல்டு இனத்தவர்கள் தங்களை இந்து என கூறிக் கொண்டு இந்து கடவுள்களை வழிபடுவது அவமானத்திலும் பெருத்த அவமானம் என்றே கூறவேண்டும்.

படித்தவர்கள் பதவியிலுள்ளவர்கள் இந்து கலாச் சாரத்தை பின்பற்றி பார்ப்பன புரோகிதர்களை வைத்து தனது இல்லத்

திருமணங்ளை நடத்துகின்றார்கள். பார்ப்பன பூசாரிகளின் காலில் விழுந்து வணங்குகின்றார்கள். இது எவ்வளவு பெரிய இழிச்செயல் என்பது பற்றி அந்த மேதாவிகளும் சிந்திப்ப தில்லை. செடியூல்டு இன சமுதாயத் தலைவர்களும் அவர்களுடைய தொடர்பினைத் துண்டித்துக் கொள்வதில்லை.

இந்து என கூறிக் கொள்ளும் செடியூல்டு இனத்தவர்கள் இந்து மதத்தின் ஒரு அங்கம் என கூறப்படுகின்ற சீக்கியர்கள் என கூறிக் கொள்ளும் செடியூல்டு இனத்தவர்கள், பௌத்தர்கள் என கூறிக் கொள்ளும் பழங்குடி இனத்தவர்கள், கிருஸ்தவர்கள் என மார்தட்டி பெருமிதமடையும் தலித் கிருஸ்தவர் ஆகியோர் தீண்டத்தகாதவர்களாக கருதப்படுகின்றார்கள்.

பார்ப்பன மதமாகிய இந்து மதத்தின் வேத சாஸ்திரங்களும். மனுஸ்மிருதியும்தான் இதற்கு அடிப்படைக் காரணம் என்பதை யாவரும் நன்கு அறிந்துள்ளார்கள்.

எனவே இந்துமதச் சட்டத்தையும் சாஸ்திரங்களையும் மாற்றாமல் தீண்டாமையை எப்படி ஒழிக்க முடியும்? இந்து வேத சாஸ்திரங்கள் இருக்கும் வரை தீண்டாமை இருந்தே தீரும்.

இந்து சமுதாயத்தில் தீண்டப்படாதவர்களின் இழிநிலை ஒழிய வேண்டுமானால் இந்து மத வேதசாஸ்திரங்களையும் மனுஸ்மிருதியையும் அணுவளவும் இல்லாமல் ஒழித்தாக வேண்டும்.

அவ்வாறு பார்ப்பன வேத சாஸ்திரங்களை ஒழிப்பதற்கு எந்த பைத்தியக்காரனும் சம்மதிக்க மாட்டான். அவ்வாறு சம்மதித்தால் அது பார்ப்பனர்களின் தற்கொலை என்றே கூற வேண்டும் தற்கொலை செய்து கொள்ள எந்த உயர்சாதி இந்துவும் முன்வரமாட்டார் என்பது தெளிவான ஒன்று.

காரணம் சாதிப் பிரிவுகளும் தீண்டாமையும் இந்து மதத்தின் ஜீவ நாடிகள் போன்ற அடிப்படை கொள்கையாகும். அடிப்படைக் கொள்கைகளை இழந்து எந்த மதமும் தொடர்ந்து இருக்க முடியாது.

ஆகவே "இந்துக்கள் தன் மனைவியை இழந்தாலும் இழந்து விடுவார்கள் --ஆனால் தன் சாதியை இழந்திட முன்வர மாட்டார்கள்".

என பாபா சாஹிப் அம்பேத்கர் அவர்கள் ஆணித்தரமாக கூறியதை இங்கு [illegible]டுத்த விரும்புகிறேன். எனவே இன்றைய நிலையில் இந்து மதவேத சாஸ்திரங் களையும் அழிக்க முடியாது - இந்து சமுதாயத்தில் சாதி வேற்றுமைகளையும் தீண்டாமையையும் ஒழித்திட கனவுகூட காண முடியாது. ஆகவே மாற்று வழியை கண்டாக வேண்டும்.

## கிருஸ்துவ மதத்தில் தீண்டாமை

அதே போன்று கிருஸ்துவ மதத்தில் சாதி வேற்றுமைகளும் தீண்டாமையும் குடிகொண்டிருப்பதை காண்கிறோம். கிருஸ்துவச் சமயம் ஒன்றாக இருப்பதும் சாதிகள் பலவாக இருப்பதையும் யாரும் மறுக்க முடியாது. கிருஸ்துவ மதத்திலுள்ளவர்களும் இந்து மதத்திலுள்ளவர்களும் வெவ்வேறு மதத்தை சார்ந்தவர்களாக இருப்பினும் தன்னுடைய சாதியின் அடிப் படையிலேயே இணைந்து வாழ்கின்றார்கள். அதாவது சமயம் வேறு சாதி ஒன்று என்ற உணர்வினை கொண்டுள்ளார்கள். அன்னை மரியாளின் திருக்குமரன் --ஏசுநாதர் அவர்கள்

அவரே -- "தேவ குமாரன்"

அவரே -- "பரிசுத்த ஆவி"

அவரே -- "கர்த்தர்"

அவரே -- "தேவன்"

பூலோகத்தையும் பரலோகத்தையும் படைத்த ஏக பிதா அந்த ஏசு பெருமானார் அவர்களே ஆவார்! என பேரன்பிற்குரிய கிருஸ்துவ நண்பர்கள் கூச்சல் போடுகின்றார்கள். நான் அதை ஆட்சேபனை இன்றி ஏற்றுக் கொள்கிறேன். ஆனால் அனைத்து மக்களையும் படைத்த கர்த்தர், பறை கிருஸ்தவன் - பள்ளக் கிருஸ்தவன் தாழ்ந்தவன் என்றும் தீண்டப்படாதவன் என்றும் படைத்துள்ளார்.

நாடார், முதலியார், தேவர், வன்னியர், செட்டியார், நாயுடு, கிருஸ்தவர்கள், உயர்ந்தவர்கள் என படைத்துள்ளார்.

அவ்வாறு ஏன் படைத்தார்? எப்படி படைத்தார்? ஒருவேளை கவனக் குறைவாக படைத்து விட்டாலும் -அந்த சாதி வேற்றுமைகளைக் களைந்திட 1995 ஆண்டுகள் வரை ஏன் நடவடிக்கை மேற்கொள்ளவில்லை என்பதுதான் எனது கேள்வி.

மெய்யாகவே தலீத் கிருஸ்தவர்களுக்கும் தேவகுமாரனாகிய ஏசுநாதரே பிதா எனில் பரிதாபத்திற்குரிய தலீத் கிருஸ்தவர்கள் ஏன் தீண்டபடாதவர்களாக நடத்தப் படுகின்றார்கள்? இதை எப்படி கேட்காமல் இருக்க முடியும்?

ஒரே "கிருஸ்தவ வேதமும்"

ரட்சிக்கின்ற கர்த்தரும் ஒருவரே"

என்கின்றபோது தலித் கிருஸ்தவர்களுக்கு மட்டும் பல இடங்களில் "தனி தேவாலயம்" (CHURCH) "தனிக் கல்லறை", சேரி என்ற தனி குடியிருப்பு, கிருஸ்தவர்களாக இருப்பினும் இந்து மதத்திலுள்ள அத்தனை சாதிப் பிரிவுகளும் மறைக்கப்படவில்லை. பெயர்கள் மாற்றப்பட்டாலும் சாதி என்னும் வால் அறுக்கப் படவில்லை.

இந்த பூலோகத்தில்தான் இந்து மதத்திலுள்ள சாதியை தலை மேல் தாங்கிக் கொண்டிருக்கின்றார்கள். ஆனால் மரித்து தேவனிடம் சென்ற பின்பு கல்லறையில் அடக்கம் செய்யப்படுகின்றார்களே அங்கு கூட அவர்களின் கல்லறையில்

**அந்தோனி சாமி தேவர், ஆரோக்கிய சாமி நாடார், மரிய தாஸ் செட்டியார்**

என்றுதான் எழுதப்பட்டிருக்கிறது. என்னையா? இந்த நாசமாய்ப்போன சாதி இவ்வளவு பல முள்ளதாக இருக்கின்றது? சர்வ வல்லமையும் பெற்றுள்ள ஏசு நாதர் தட்டுங்கள் திறக்கப்படும் என்றார். ஆனால் அவருடைய தேவாலயத்திற்குள் சென்று வழிபடுவதற்கு தலித் கிருஸ்தவர்கள் கடப்பாரையை கொண்டு தட்டினாலும் திறக்கப் படவில்லையே? ஏன்? ஏன்? என்று எப்படி ஐயா -கேட்காமல் இருக்க முடியும்?

"ஏசுவின் இராஜ்ஜியம் இனிமையானது"

"ஏசுவின் இராஜ்ஜியம் வருக"

என ஜெபிக்கின்றார்கள்.

இன்று நாம் காண்கின்ற கிருஸ்துவ ராஜ்ஜியத்தில் உயர்சாதி கிருஸ்தவர்களால் தலீத் கிருஸ்தவர்கள் தீண்டப்படாதவர் களாக நடத்தப்படுகின்றார்கள்.

பரலோகத்திலும் அதே ஏசு நாதர் தான் இருப்பதாக கூறுகின்றார்கள். ஏசு பிறந்து 1995 ஆண்டுகள் வரை இந்த பூலோகத்தில் தீண்டாமை ஒழிக்கப்படவில்லை எனில் நாளை பரலோகத்தில் மட்டும் தலித் கிருஸ்தவர்கள் தொட்டுக் கொள்ளப்படுவார்கள் என்பதற்கு என்ன உத்திரவாதம் இருக்க முடியும்? இதை நாம் கேட்காமல் இருக்க முடியுமா?

இந்த லோகத்தில் எனது மக்களை தீண்டத்தாகவர்களாக ஒதுக்கிவைத்திருக்கும் ஏசு நாதர் அடுத்த லோகத்தில் நிச்சயம் தீண்டிக் கொள்வார் அங்கு "தனி தேவாலயம்" இருக்காது. "தனி கல்லறை இருக்காது" "சேரி" என்ற ஒதுக்குப்புறம் இருக்காது என நம்புவதாக இருப்பின் நான் அடிமுட்டாளாக மாற வேண்டும் அல்லது பைத்தியக்காரனாக இருக்க வேண்டும்.

ஆனால் கிருஸ்துவ மதத்திலுள்ள இவ்வளவு சாதி வேற்றுமை –சாதி வெறி உணர்வுகளைக் கண்ட பின்பும் எனது தலித் மக்கள் அனுபவிக்கின்ற சித்திரவதைகள் அவமானங்கள் ஆகியவற்றை கண்டு கண்ணீர் விடுகின்ற நிலையில் நான் முட்டாளாகவோ அல்லது பைத்தியக்காரனாகவோ மாறுவதற்கு தயாராக இல்லை.

ஒரு உண்மையை மட்டும் என்னால் தெளிவாக உணர முடிகின்றது. அதாவது மொத்தத்தில் கிருஸ்துவ மதம் என்பது பெயரளவிலும், இறை வழிபாடு முறைகளிலும்தான் இந்து மதத்திலிருந்து மாறுபட்டிருக்கின்றதே தவிர மற்ற எல்லாவகைகளிலும் கிருஸ்துவமதமும் இந்து மதமும் ஒன்று தான்.

இந்துக்களால் தீண்டப்படாத மக்கள் எந்த அளவுக்கு சித்திரவதை செய்யப்படுகின்றார்களோ அதே அளவுக்கு உயர்

சாதி கிருஸ்தவர்களாலும் பல்வேறு வகைகளில் சித்திரவதை செய்யப் படுகின்றார்கள்; கேவலப்படுத்தப்படுகின்றார்கள். இதை யாரும் மறுக்க முடியாது.

ஒரே ஒரு வகையில் தலித் கிருஸ்தவர்கள் நிம்மதியடையக் கூடும். அதாவது "பல நூறு ஆண்டுகளாக அடிமைபடுத்திவரும் இந்து மதத்தைவிட்டு வேறொரு மதத்தை தழுவிக் கொண்டோம்".

## "நாங்கள் இந்துக்கள் அல்ல"

"பல நூறு ஆண்டுகளுக்கு பின் எங்களுக்கு சூடு சொரணை வந்துவிட்டது". எனவே நாங்கள் மதமாற்றம் செய்து கொண்டோம். அதுதான் எங்களுடைய சுயமரியாதை! என்ற ஆறுதல். அதிலும் நியாயம் இருக்கின்றது என்பதை நான் ஏற்றுக் கொள்கிறேன். அன்றைய நிலையில் தீண்டத்தகாத மக்கள் சுயமரியாதையோடு இந்து மதத்தை விட்டு கிருஸ்துவ மதத்தை தழுவியதில் தவறு இல்லை.

ஆனால் கர்த்தராகிய ஏசு நாதர் அம்மக்கள் மீது 1995 ஆண்டுகளாக கருணைவைக்காமல் தீண்டப்படாத பாவிகளாக வருந்த வைத்திருக்கின்ற நிலையை கண்டு தான் ஏன்? என்ற கேள்வி எழுப்ப வேண்டியுள்ளது. சிங்கம் பாய்ந்து வருகின்றது எனில் தப்பித்துக் கொள்ள ஏதாவது ஒரு திசையை நோக்கி ஓடித்தான் தீர வேண்டும். அந்த சூழ்நிலையில் -- எங்கு எப்படிப்பட்ட ஆபத்துக்கள் இடையே குறுக்கிடும் என சிந்திக்க முடியாது.

சிங்கத்திற்கு பயந்து ஓடினால் எதிரே புலி ஒன்று வாயை பிளந்து கொண்டு நிற்கிறது.

ஆம்! – இந்துமதம் என்ற சிங்கத்திற்கு பயந்து ஓடிய தீண்டப்படாத மக்கள், புலி என்ற கிருஸ்துவமத சாதிவெறியர் களிடம் மாட்டிக் கொண்டு வருந்துகின்றார்கள். சாதாரணமாக கிராமப்புறங்களில் கூறுவார்கள் "உரலுக்கு ஒரு பக்கம் இடி! மத்தளத்திற்கு இரண்டு பக்கமும் அடி" என்று அதைப்போல் தலீத் கிருஸ்தவர்கள் உயர்சாதி கிருஸ்தவர்களாளும் ஒதுக்கி நசுக்கப்படுகின்றார்கள். இந்துக்களாளும் நசுக்கப்படுகின் றார்கள். எனவே சிங்கம், புலி ஆகிய இரண்டு கொடிய மிருகங்க ளின் ஆபத்திலிருந்து தலீத் கிருஸ்தவர்கள் தப்பிப்பதற்கு வழி என்ன என்பதுதான் இன்றைய பிரச்சனை. ஆகவே கிருஸ்துவ மதத்தில் தீண்டாமை நிலையாக குடி கொண்டிருப்பதால் அங்குதீண்டாமை ஒழிப்பு பற்றி பேசுவதற்கே இடமில்லை.

## சீக்கிய மதமும் தீண்டாமையும்

இந்து மதத்தில் இருப்பது போலவே அனைத்து சாதிப் பிரிவுகளும் சீக்கியர் மதத்தில் இருக்கின்றது. ஆனால் இந்து மதத்தில் உள்ள சாதி வெறி கொடுமைகள் சீக்கிய மதத்தில் இல்லை. இருப்பினும் தலீத் சீக்கியர்கள் செடியூல்டு இனத்தவர்களாகவே வாழ்கின்றார்கள்.

ஆகவே சீக்கிய மதத்திலும் வேற்றுமைகள் இருப்பதால் தீண்டாமையை ஒழிக்க முடியாது.

## பௌத்தமும் தீண்டாமை ஒழிப்பும்.

இந்துவாகப் பிறந்தேன் –இந்துவாக சாக மாட்டேன் என கூறிய பாபாசாஹிப் அம்பேத்கர் அவர்கள் ஐந்து லட்சம் மக்களோடு பௌத்த நெறியை ஏற்றுக் கொண்டார். எனவே

பாபாசாஹிப் அம்பேத்கர் அவர்களின் கொள்கையை ஏற்றுக் கொண்டவர்கள் பௌத்தமாக மாறுவதுதான் நியாயமானது. அது மட்டுமல்ல பாபாசாஹிப் அம்பேத்கர் அவர்களின் உழைப்பால் உயர்வு பெற்றவர்கள் கண்டிப்பாக பௌத்தர்க ளாக மாறுவது அவசியம். இதில் எனக்கு எவ்வித மாற்றுக் கருத்தும் இல்லவே இல்லை.

ஆனால் பாபாசாஹிப் அம்பேத்கர் அவர்களின் கொள்கை களுக்காகவே தான் உயிர் வாழ்வதாக மார்தட்டிக் கொள்பவர் கள், பாபாசாஹிப் அம்பேத்கர் அவர்களின் திருப்பெயரில் இயக்கம் நடத்துபவர்கள், பாபாசாஹிப் அம்பேத்கர் அவர்க ளின் கொள்கைகளை தெளிவாக புரிந்தவர்கள், ஏன் இன்னும் இந்துவாக வாழ்ந்து கொண்டிருக்கிறார்கள்?

பாபாசாஹிப் அவர்களின் உழைப்பால் படித்து பட்டம் பெற்றவர்கள். அதன்மூலம் இட ஒதுக்கீடு பெற்று உத்தியோகம் பெற்றவர்கள். ஓரளவு உயர்ந்திருப்பவர்கள் ஏன் பௌத்தராக மாறவில்லை? பாபாசாஹிப் அம்பேத்கர் அவர்களின் கடும் உழைப்பால் இட ஒதுக்கீடு பெற்று பல கோடிக் கணக்கானவர் கள் அரசுப் பணியில் இருக்கின்றார்கள். அவர்களில் பத்து சதவிகிதமாவது பௌத்தராக மாறக் கூடாதா என்ன?

இன்று பல பாராளுமன்ற உறுப்பினர்கள் நூற்றுக்கணக் கான சட்டமன்ற உறுப்பினர்கள் இடஒதுக்கீடு மூலம் தனித் தொகுதியில் போட்டியிட்டு அனுபவிக்கின்றார்களெனில், அந்த வாய்ப்பு பாபாசாஹிப் அம்பேத்கர் அவர்களின் உழைப்பால்தானே அவர்களுக்கு கிட்டியது.

ஆனால் எவனாவது ஒருவன் நான் பாபாசாஹிப் அவர்களின் உழைப்பால்தான் இந்த பதவியை பெற்றேன் என கூறுகின்றானா எனில் இல்லவே இல்லை.

சமுதாயத்தின் திருப்பெயரை சொல்லி தனித் தொகுதியில் போட்டியிட்டு பதவிபெற்றவர்கள் அந்த மக்களுக்காக குரல் கொடுக்கின்றார்களா எனில் இல்லவே இல்லை.

பாபா சாஹிப் அம்பேத்கர் அவர்களின் உழைப்பால் உயர்ந்தவர்கள் ஏன் பௌத்தராக மாறவில்லை? என யாராவது தட்டிக்கேட்கின்றார்களா —எனில் அதுவும் இல்லை.

செடியூல்டு இன சமூக அமைப்புக்களும் சமூகத் தலைவர்களும் போராடுவதெல்லாம் இந்துக்களாக வாழும் மக்களுக்காகவே தான் என்பது தெளிவான ஒன்று. இதை யாரும் இல்லை என கூற முடியாது.

இதைவிட கொடுமையாதெனில் நான் அம்பேத்கர் தொண்டன் நான் ஒரு பௌத்தன் என மார்தட்டிக் கொள்ளும் பெரிய மனிதர்களின் வீட்டு திருமணம் மற்றும் சாவுக்கான அனைத்து காரியங்களையும் இந்து கலாச்சார முறைப்படியே நடத்துகின்றார்கள். ஊருக்கு உபதேசம் செய்கின்ற பௌத்த ஜீவிகள் தான் அதிகம் எனலாம்.

பௌத்த தலைவர்களால்கூட அதை தட்டிக் கேட்க முடியவில்லை —ஏன்? எங்கே போனது பௌத்தம்? எங்கே போனது அவர்களுடைய துணிவு?

ஏழை எளியவர்கள் –பாபாசாஹிப் அம்பேத்கர் அவர்களுடைய உழைப்பின் பலனை நுகர முடியாதவர்கள் இந்துவாக வாழவேண்டும். ஆட்டு மந்தைகள் போன்று மக்கள் தொகை கணக்கில் இந்து (செடியூல்டு) இனத்தவர்களின் எண்ணிக்கையை அதிகப்படுத்த வேண்டும். அந்த அப்பாவிகளின் மக்கள் தொகை அடிப்படையில் புத்திசாலிகள் மட்டும் இடஒதுக்கீடு

அனுபவித்துக் கொண்டு இந்து கடவுள்களை வணங்கலாம் - இந்துவாக வாழலாம்.

இதை ஏன் என்று கேட்பதற்கு எந்த பௌத்த குஞ்சுகளுக்கும் துணிவில்லை --ஏன்? பெரும்பாலான தலித் மக்கள் பாபாசாஹிப் அம்பேத்கர் அவர்களை "தந்தை" என்றும் "தலைவர்" என்றும் "ரட்சகர்" என்றும் உளமார ஏற்றுக் கொண்டிருக்கிறார்கள். ஆனால் அவர் காட்டிய வழியில் பௌத்தராக மாறாமல் இந்துவாக வாழ்வதற்கு யாது காரணம் என்பதைப் பற்றி சிந்திக்க வேண்டும்.

இந்து மதத்தை கடுமையாக எதிர்த்தவர் பாபாசாஹிப் அம்பேத்கர் அவர்கள். இந்துவாக வாழக் கூடாது என கண்டிப்பாக வலியுறுத்தியவர் பாபாசாஹிப் அவர்கள்.

எதிர்கால இந்தியாவில் இந்து மதம் என்று இல்லை இந்து கடவுளும் இல்லை என்ற நிலை ஏற்படுமேயானால் அது பாபாசாஹிப் அம்பேத்கர் அவர்களின் உயிருள்ள கொள்கையினால் மட்டுமே செய்து காட்ட முடியும். அப்படி இருக்கும்போது பாபாசாஹிப் அம்பேத்கர் அவர்களின் கொள்கைவாதிகள் இந்துவாக வாழ்வதற்கு வெட்கப்பட வேண்டாமா? அவ்வாறு வெட்கப்படாமல் இருப்பதற்கு யாது காரணம்? இதற்கு விடை காண்பது அவசியம்.

ஒன்று இந்துவாக வாழ்ந்தால்தான் இட ஒதுக்கீடு பெற முடியும் என்ற குருட்டு நம்பிக்கை. அதைவிட முக்கியமான காரணம். இந்துவாக வாழ்ந்தாலும் தீண்டப்பாடதவன்தான், பௌத்தனாக வாழ்ந்தாலும் தீண்டப்படாதவன்தான் என்ற உணர்வு. மேலும் இன்றைய இந்தியாவில் நான் ஒரு பௌத்தன் என்று கூறிக் கொள்வதும் ஒன்றுதான், நான் ஒரு பள்ளன்,

பறையன் என கூறிக் கொள்வதும் ஒன்றுதான். ஏனெனில் இந்து மதத்தை துறந்து தாம் ஏற்கனவே பெற்றிருந்த பௌத்த மதத்தை தழுவினாலும் பெரும்பான்மையினரான இந்துக்களால் மனிதனாக மதிக்கப்படுவதில்லை என்பதை அனுபவ ரீதியாக காண்கின்றார்கள்.

ஆகவேதான் ஆயிரம் ஆயிரம் வகையான சூழ்நிலைகளும் அவமானங்களும் இந்துக்களால் வாரி வாரி வழங்கப் பட்டாலும் இந்து மதத்தைவிட்டு பௌத்தம் தழுவுவதற்கு முன் வர மறுக்கின்றார்கள் என கருதக் கூடும். இடஒதுக்கீடு பெறு வதற்காக இந்துவாக இருக்கின்றேன் என்பது முட்டாள்தனம் என்பதைவிட அயோக்கியத்தனமும் சமூக மோசடியும் என கூறலாம்.

பௌத்தம் ஒரு உயரிய நெறி அதை யாரும் மறுக்க முடியாது. பௌத்தம் தழுவினால் 'நான் இந்து அல்ல' என்ற ஆத்மதிருப்தி ஏற்படும். இன்று தீண்டப்படாத மக்கள் பௌத்தர்களாக மாறினால் இந்து மதத்திலிருந்து வேறுபட்ட தன் கலாச் சாரத்தை நிலை நாட்ட முடியும். ஆனால் இந்து சமுதாயத்திற்கு மத்தியில் ஏற்கனவே அனுபவித்த அதே சாதி வேற்றுமை கொடுமைகளைதான் அனுபவிக்க நேரிடுகின்றது. காரணம் சந்தனம் – உயர்ந்த திரவியம்! வாசனைமிக்கது! சிறிதளவுள்ள சந்தனக் கலவை பெரு அளவிலுள்ள சாக்கடைக்கு மத்தியில் மணம் கமழுவதாக இருக்க முடியாது. சாக்கடையின் துர்நாற்றம்தான் மித மிஞ்சி வீசும். அதைப்போல் தலித் மக்கள் குறிப்பாக படிக்காதவர்கள் சேரி என்ற ஒதுக்குப் புறத்தில் வாழ்பவர்கள். இந்துக்களுக்கு மத்தியில் சாதியை மறைத்து வாழ இயலாதவர்கள். பௌத்தர்களாக மாறினால் காணப்போகும் மாற்றம் என்னவாக இருக்க முடியும்? பறைய

சுப்பன் தான்! பழைய கருப்பன் மகன் தான்! அதே பள்ளன் தான்! அதே பறையன்தான்! என பலர் கூறுவதிலும் நியாயம் இருக்கின்றது. எனது உற்றார் உறவினர்கள் கிராமப்புறங்களில் இன்றும் இந்துக்களுக்கு பிணம் சுடுகின்றார்கள். பறையடிக்கின்றார்கள். செத்த மாட்டை தூக்கி வருகின்றார்கள். அவர்களிடம் சென்று இனிமேல் இந்துவாக வாழாதீர்கள் நீங்கள் பௌத்தர்களாக மாறி விடுங்கள் என கூறினால் பதில் என்ன வருகின்றது பார்ப்போம்.

"சரி நாங்கள் பௌத்தர்களாக மாறி விட்டால் சாதி இந்துக்களின் பிணத்தை சுடுவதற்குபோவதா? வேண்டாமா?" போகக் கூடாது! சரி பிணம் சுட போகாவிட்டால் வயல் வேலைகள் கொடுக்க மாட்டார்களே! ஐயா! வயிற்றைவிட சுயமரியாதைதான் பெரியது நீ பிணம் சுட போகாதே அதை விட பிச்சை எடுத்து பிழைத்துக்கொள். பிச்சை எடுத்து பிழைப்பதற்கு பௌத்தராக வேண்டுமா? நாங்கள் பௌத்தரானால் டீ கடைக்குள் சென்று சமமாக டீ அருந்த அனுமதிப்பார்களா?

இந்த கேள்விக்கு யார் பதில் கூறுவது? பட்டணத்து தலைவர்களும் மேனாமினுக்கிகளும் விதம் விதமாக பதில் கூறலாம். ஆனால் சாதி வேற்றுமை கொடுமைகளை அன்றாடம் அனுபவிக்கின்ற கிராமவாசிக்குத்தான் அதன் விளைவுகளைக் பற்றி உணர முடியும்.

சிலர் கேட்கலாம் இதெல்லாம் பாபாசாஹிப் அம்பேத்கருக்கு தெரியாதா என்ன? அவர் பௌத்தம் மாறியது பலனின்றி போவதற்காகவா என்ன? புத்திசாலித்தனமான கேள்விதான். பாபாசாஹிப் அம்பேத்கர் அவர்கள் பௌத்தம் தழுவியதுதான் நியாயமானது. ஆனால் பௌத்தம் தழுவினாலும் சாதிவெறி

பிடித்தவர்களால் மனிதனாக மதிக்கப் படவில்லை எனில் காலசூழ்நிலைகளுக்கு ஏற்ப சிறு மாற்றங்கள் செய்து கொள்வதில் தவறு இல்லை. மொத்தத்தில் எப்படியாவது சாதி வேற்றுமை கொடுமைகளிலிருந்து விடுதலை பெற வேண்டும் என்பது தான் பாபாசாஹிப் அம்பேத்கர் அவர்களின் அடிப்படை கொள்கை என்பதை தெளிவாக புரிந்து கொள்ள வேண்டும்.

எது எப்படி இருப்பினும் செடியூல்டு இன மக்கள் இந்துவாக வாழக் கூடாது என்பது தான் பாபாசாஹிப் அம்பேத்கர் அவர்களின் திடமான கொள்கை. அதையேதான் நானும் வலியுறுத்துகின்றேன். ஆனால் இந்துவாக திகழ்ந்து கொண்டிருப்பவர்களும் இந்து மத கோவாண்டிகள் பின்னால் நிற்பவர்களோடு கொஞ்சி குலாவிக் கொண்டிருப்பவர்களும் என் மீது வீண் பழி சுமத்துவது அவர்களுடைய அறியாமை என்று நான் கூறமாட்டேன். ஆனால் அவர்களுக்கு பாபாசாஹிப் அம்பேத்கர் அவர்களின் அடிப்படை தத்துவம் புரியவில்லை என்பேன். அல்லது சாதி வேற்றுமைக் கொடுமைகளிலிருந்து விடுதலை பெற காலசூழ்நிலைகளுக்கு ஏற்ப செயலாற்றும் தெளிவான அறிவுத்திறன் இல்லை என்றே கூறுவேன். எதையும் பொறாமை எண்ணத்தோடு நோக்குவது தவறு. ஆழ்ந்து சிந்திக்க வேண்டும். அதற்கு அனுபவ அறிவும் அவசியம். விரோத மனப்பான்மையோடு பழி தூற்றுபவர்கள் –மெய்யான சமூக உணர்வற்றவர்கள் எனலாம்.

பாபாசாஹிப் அம்பேத்கர் அவர்களின் கொள்கை அடிப்படையில் 'பௌத்தம் தழுவுவது அவசியம் எனலாம். அதே நேரத்தில் இந்து மதத்தைவிட்டு வெளியேறுவது கண்டிப்பான ஒன்று''. இதன் பொருளை தலித் மக்கள்

தெளிவாக புரிந்து கொள்ள வேண்டும். பாபாசாஹிப் பெயரில் இயக்கம் நடத்துகின்ற தலைவர்களில் நூற்றுக்கு 90 பேர்கள் இந்துவாக வாழ்கின்றார்கள். அதாவது "பாபாசாஹிப் கொள்கை என்ற போர்வையை போர்த்திக் கொண்டு தலீத் மக்களை ஏமாற்றி வருகின்றார்கள் என்பதை யாரும் மறுக்க முடியாது. மெய்யாகவே அவர்கள் பாபாசாஹிப் அவர்களின் கொள்கையை ஏற்றுக் கொள்வதாக இருப்பின் அவர்கள் பௌத்தர்களாக மாறி இருக்க வேண்டும் மல்லவா? எனவே பௌத்தம், பழங்குடி இன மக்களின் தனித் தன்மையையும் தனி கலாச்சாரத்தையும் நிலைநாட்டுவதற்கு மட்டுமே பயன்படும் பௌத்தத்தில் தீண்டாமை இல்லை. ஆனால் அதன் மூலம் தீண்டாமையை ஒழிக்க முடியாது.

# அரசியல் சட்டமும் தீண்டாமை ஒழிப்பும்

தீண்டப்படாத மக்களை இந்துக்களாக வாழச் செய்து தீண்டாமையை ஒழிப்பதாக மகாத்மா காந்தி கூறினார். ஓநாய் கூட்டத்திற்கு அருகில் ஆட்டுக்குட்டிகளுக்கு கூடாரம் அமைப்பதற்கும் காந்தியாரின் கருத்திற்கும் வித்தியாசம் கிடையாது.

ஆனால் பாபா சாஹிப் அம்பேத்கார் அவர்கள் அரசியல் சட்டத்தின் மூலம் செடியூல்டு இன மக்களுக்கு பாதுகாப்பும் – முன்னேற்றத்திற்கான வழிவகைகளையும் ஏற்படுத்திக் கொடுத்தார்கள். தீண்டாமை குற்றத்திற்கு அரசியல் சட்டத்தில் கடுமையான தண்டனையை ஏற்படுத்தினார்கள். அதன் பயனாக செடியுல்டு இன மக்கள் ஓரளவு தலை நிமிர்ந்து நடக்க முடிந்தது. செடியூல்டு இனமக்கள் ஓரளவு கல்வி – வேலைவாய்ப்புக்கள் பெற முடிந்தது. தீண்டப்படாத மக்கள்

தலை நிமிர்ந்து நடப்பதற்கு கற்றுக் கொடுத்தவர் பாபாசாஹிப் அம்பேத்கார் அவர்கள்தான்.

ஆனால் ஒடுக்கப்பட்ட மக்கள் ஓரளவு உயர்ந்து வருவதை பொருத்துக் கொள்ள இயலாத பார்ப்பனர்கள் காலம் முழுவதும் இட ஒதுக்கீட்டிற்கு எதிர்ப்பு தெரிவித்து வந்தார்கள். என்னதான் காலம் மாறினாலும் ஒநாய்களின் குணத்தை மாற்ற முடியாது. எனவே பார்ப்பனர்களின் நீண்டநாள் ஆதங்கம் வெற்றி பெற்றது. அதாவது மண்டல் கமிஷன் பரிந்துரை மீதான தீர்ப்பின் மூலம் -- பார்ப்பன கூட்டத்தார் சம்பந்தமில்லாமல் செடியூல்டு இன மக்களுக்கு கிடைத்துக் கொண்டிருந்த இட ஒதுக்கீடு முறைக்கு ஊனம் விளைவித்து விட்டார்கள். அதாவது செடியூல்டு இனமக்களின் தலையில் சம்மட்டியால் பலமாக தாக்கி விட்டார்கள். ஆகவே இதுவரை செடியூல்டு இன மக்கள் அனுபவித்துவந்த இடஒதுக்கீடு இனிமேல் அனுபவிக்க முடியாது.

(நான் எழுதியுள்ள "மண்டல் கமிஷன் பரிந்துரை மீதான தீர்ப்பின் -- ஆபத்து! ஆபத்து!!" என்ற நூலில் ஓரளவு விளக்கமாக கூறியுள்ளேன்)

மேலும் தீண்டாமை ஒழிப்பு சட்டம் இருந்தாலும் தீண்டாமை குற்றத்தின் கீழ் யாரும் தண்டிக்கப்படுவதே இல்லை. மெய்யாகவே தீண்டாமை ஒழிப்பு சட்டப்படி தண்டனை வழங்குவதாக இருப்பின். நூற்றுக்கு நூறு இந்துக்கள் சிறையில் அடைக்கப்பட்டிருக்க வேண்டும்.

சங்கராச்சாரிகள் அனைவரும் சிறையில் இருக்க வேண்டும். இந்து கோவில்கள் அனைத்தும் மூடியிருக்க வேண்டும். ஆனால்

பி.சி.ஆர். துறையின் மூலம் எந்த வழக்கும் வெற்றி பெருவதும் இல்லை; யாரும் தண்டிக்கப்படுவதும் இல்லவே இல்லை.

மாறாக பாதிக்கப்பட்டு புகார் கொடுக்கும் தலீத் மக்கள்தான் தண்டிக்கப் படுகின்றார்கள். பாதுகாப்பு கொடுக்க வேண்டிய காவல் துறையினர் பாதிக்கப் படுகின்ற தலீத் மக்களைத்தான் தண்டிக்கிறார்கள். காரணம் பெரும்பான்மையானவர்கள் சாதி வெறி பிடித்த இந்துக்கள்! பண பலம் உடையவர்கள் இந்துக்கள்!! அரசியல் அதிகாரமும் இந்துக்களிடம்!!! சாதி வெறியும் சாதி ஒற்றுமையும் உடையவர்கள் இந்துக்கள்!!

சாதி இந்துக்களும் பார்ப்பனரல்லாத உயர் சாதி இந்துக்களும் பார்ப்பனர்களின் காலில் விழுந்து வணங்கு பவர்கள். சாதி இந்துக்கள் பார்ப்பனர்களின் காலில்ல விழுந்து வணங்குவதற்கு வெட்கப்பட மாட்டார்கள். ஆனால் ஒரு பறையனை தொடுவதற்கு கூச்சப்படுவார்கள். பறையன் தொட்டு விட்டால் அவர்களுடைய வாழ்வும் வளமும் நாசமாய் போய் விடும் என அஞ்சுவார்கள்.

எனவே அரசியல் சட்டம் செடியூல்டு இன மக்களுக்கு கல்வி, உத்தியோகம், பதவிகள் போன்றவற்றில் இடஒதுகீடு பெற்று முன்னேற்றமடைய பயன்படும் என்பதில் சந்தேகமில்லை.

ஆனால் அது நிரந்தரமானதல்ல என்பதை பாபாசாஹிப் அம்பேத்கர் அவர்களே தெளிவாக கூறியுள்ளார்கள். மேலும் விளக்கியுள்ள பாபாசாஹிப் அவர்கள் அரசியல் சட்டத்தை எப்படி வேண்டுமானாலும் மாற்றிக் கொள்ளலாம். ஆனால் மதத்தின் சட்டத்தை மாற்ற முடியாது என கூறுகின்றார்கள்.

அதாவது அரசியல் சட்டத்தில் தீண்டாமைக்கு கடுமையான தண்டனை இருந்தாலும் இந்து மதத்தின் சாதி வேற்றுமை சட்டம் அரசியல் சட்டத்தைவிட பல மடங்கு பலம் உள்ளதாக இருக்கின்றது. அந்த பலம் பொருந்திய இந்து மதச் சட்டத்தை கையிலேந்தி இருக்கின்றது. நீதிபதிகளால் அரசியல் சட்டப்படி தீண்டாமை குற்றத்திற்கு எப்படி தண்டனை வழங்க இயலும்? முடியவே முடியாது. எதிர்பார்க்கவும் கூடாது.

ஆகவே ஒரு மதத்தின் சட்டத்தை அதைவிட பலம் பொருந்திய வேறொரு மதத்தின் சட்டத்தினால்தான் தகர்த்திட முடியும். அதற்கு ஒரே வழி மதமாற்றம் ஒன்றுதான்! அதுதான் பாபாசாஹிப் அம்பேத்கர் அவர்களின் அடிப்படைக் கொள்கை. அதன் அடிப்படையில்தான் பாபாசாஹிப் அவ கள் மதமாற்றம் செய்தார்கள். பௌத்தம் தழுவினார்கள். பாபாசாஹிப் அவர்கள் இன்னும் சில ஆண்டுகள் உயிரோடு இருந்திருந்தால் பௌத்தத்தின் மூலம் மாபெரும் மாற்றத்தை ஏற்படுத்தி இருப்பார்கள். ஆனால் வஞ்சகர் கூட்டம் இரண்டு மாதங்கள்கூட நிறைவு பெறவிடவில்லை.

இன்று பாபாசாஹிப் அவர்களின் திறமையில் இரண்டு சதவிகிதம் பெற்றுள்ள தலைவர்கள்கூட இல்லை. ஆகவே பௌத்தம் இந்து மதத்தின் ஒரு அங்கம் எனக் கூற ஆரம்பித்து விட்டார். பௌத்தம் மாறுவதை இந்துக்கள் ஆதரிக்கின்றார்கள். காரணம் பௌத்தம் இந்து மதமும் ஒன்று என கருதுகின்றார்கள். அதாவது பௌத்த மத சட்டத்தினால் இந்து மத இரும்புச் சட்டத்தை அசைக்க முடியாது என உணர்ந்துள்ளார்கள். அதனால்தான் நான் கூறுகின்றேன்

இந்திய அரசியல் சட்டத்தைவிட பலம் பொருந்திய இந்துமத சாதி வேற்றுமைச் சட்டத்தை தூள்தூளாக்கினால்தான் தீண்டாமை ஒழியும். அதற்கு ஒரே வழி பல மடங்கு பலம் பொருந்திய வேறொரு மதத்தை தேர்ந்தெடுத்துக் கொண்டால்தான் வெற்றி பெற முடியும்.

ஒரு மதத்தினால்தான் தீண்டாமை உருவாக்கிப்பட்டிருக்கின்றது என்பது உண்மையாக இருப்பதனால் - வேறொரு மதத்தினாலேயே அதை தகர்த்திடுவதற்கு முயற்சிப்பதில் தவறு இல்லை.

ஆம்! அரசியல் சட்டத்தைவிட மதத்தின் சட்டத்தைக் கொண்டே தீண்டாமையை ஒழிக்க முடியும்.

# இஸ்லாம் மார்க்கமும் தீண்டாமை ஒழிப்பும்.

தீண்டாமையையும் - அடிமை நிலையையும் ஒழிப்பதற்காகவே தோன்றியதுதான் இஸ்லாம் மார்க்கம். ஆடு மாடுகளைப் போல மனிதன் 'அடிமைகள் சந்தையில்' ஏலம் போட்டு விற்கப்பட்ட அவல நிலையை ஒழிப்பதற்கு தோன்றியதுதான் இஸ்லாம் மார்க்கம்!

*எனவே இஸ்லாத்தில் தீண்டாமை இல்லை

*இந்துவாக இருந்தும் "என்ன சாதி" என கேட்கும் கேவலமான நிலை இஸ்லாத்தில் இல்லை. அதாவது ஒரு இஸ்லாமியரை இன்னொரு இஸ்லாமியர் நீ என்ன சாதி என கேட்பதில்லை.

*இஸ்லாத்தின் முக்கிய கொள்கை சகோதரத்துவத்தை வளர்ப்பதாகும்.

*உள்ளத்தை தூய்மையானதாக வைத்துக் கொள்ள ஒரு நாளைக்கு ஐந்து வேளை தொழ வேண்டும் என வலியுறுத்துகின்றது. அதாவது தொழுகின்றபோது உள்ளம் தூய்மையுடையதாகின்றது. ஒருமுறை தொழுகை முடிந்து அடுத்து சில மணி நேரங்களில் மீண்டும் தொழுகை நடத்துவதால் தீய எண்ணங்கள் எழுவதற்கு அவகாசம் இல்லை.

இந்துவாக இருந்தபோது வெட்கமின்றி 'என்ன சாதி' என கேட்கப்பட்டவர்கள் இஸ்லாம் ஏற்றுக் கொண்டபின் இந்துக்களால் 'என்ன சாதி?' என கேட்கப் படுவதில்லை.

எனவே என்ன சாதி? என கேட்டு அவமானப்படுத்தப் படாமலிருப்பது ஒன்றே இஸ்லாத்திற்கு பெருமையுடைய தாகும். ஒரு தீண்டப்படாத இந்து வாலிபர் அல்லது இளம்பெண் உயர் சாதி இந்து பெண் அல்லது வாலிபரோடு காதல் தொடர்பு ஏற்படுத்திக் கொண்டால் தலை தனியாக போய்விடும்.

ஐ.ஏ.எஸ். பதவியிலுள்ள ஒரு தலித் வாலிபர் சாதாரண ஏழை உயர் சாதி கிருஸ்தவர் அல்லது இந்து ஒருவரின் படிக்காத குருட்டு பெண்ணைக்கூட திருமணம் செய்து கொள்ள அனுமதி இல்லை. ஆனால் தீண்டப்படாதவர்கள் இஸ்லாமியராக மாறினால் அவர்களின் படிப்பு மற்றும் வசதி வாய்ப்பிற்கேற்ப பெண் கொடுப்பதற்கும், பெண் எடுப்பதற்கும் இஸ்லாமியர்கள் முன் வருகின்றார்கள். கலிமா சொல்லிய மறுகணமே அவ-னுடைய தீண்டாமை மறைந்து விடுகிறது. அவன் மனிதனாக

மதிக்கப் படுகின்றான். அதாவது பல ஆயிரம் ஆண்டுகள் தீண்டப்படாது ஒதுக்கி வைக்கப்பட்ட சமூகத்தை சேர்ந்தவனை ஒரு கணநேரத்தில் மதிக்கப்படுகின்ற மனிதனாக மாற்றுவது இஸ்லாம் மார்க்கம் ஒன்றே ஒன்றுதான்!

எனவே இஸ்லாம் மார்க்கம் ஒன்றின் மூலமாகவே தீண்டாமையை ஒழிக்க முடியும் என திண்ணமாக கூறுகின்றேன். எந்த வகையிலும் தீண்டாமையை ஒழிக்க முடியவில்லை என்கின்றபோது எளிதானமுறையில் ஒரே நிமிடத்தில் விடுதலை பெறுவதற்கு தலீத் மக்கள் அதாவது தீண்டப்படாத கிருஸ்தவர்களும் தீண்டப்படாத இந்துக்களும் இஸ்லாம் மார்க்கத்தை ஏற்றுக் கொண்டு மதிக்கப்படுகின்ற மனிதர்களாக வாழுங்கள் என நான் கூறுவதில் என்ன தவறு காண்கின்றார்கள் என புரியவில்லை.

## பழிக்குப்பழி

பல ஆயிரம் ஆண்டுகளாக தீண்டப்படாதவர்கள் என அவமானப்படுத்தப்படுவதற்கு மூலகாரணமான இந்து மதத்தை ஒழித்து பழிக்குப் பழிவாங்குவது சூடு, சொரணை யுள்ள ஒவ்வொரு தலீத் மகனின் பிறப்புக் கடமையாகும். இந்த உணர்வு இல்லாதவன் தன்னுடைய தகப்பனுக்குத்தான் பிறந்தேன் என கூறிக்கொள்வதற்கு தகுதியற்றவன்.

அதே போன்று தீண்டாமை பாராட்டுகின்ற கிருஸ்துவ மதத்தின் சாதி வேற்றுமை உணர்வை தோலுரித்துக்காட்டி பழிக்குப்பழி வாங்குவது ஒவ்வொரு தலீத் கிருஸ்தவரின் சுயமரியாதையும் கடமையுமாகும். அதற்கு ஒரே ஒரு வழி

இஸ்லாம் மார்க்கத்தை ஏற்றுக் கொள்வதே சாலச்சிறந்த வழியாகும். எனவே இன்றைய நிலையில் எனது அனுபவத்திலும் ஆராய்ச்சி முடிவிலும் எளிதான முறையில் தீண்டாமை ஒழிய இஸ்லாம் மார்க்கம் ஒன்றுதான் சிறந்த வழி என கூறுகின்றேன்.

அதை தவிர்த்து எளிதானதும் மெய்யாகவே நடை-முறைப்படுத்தக் கூடியதுமான வேறுவழி இருப்பதாக யாராவது கூறுவார்களேயானால் அதையும் ஏற்றுக் கொள்ள தயாராக இருக்கிறேன்.

## சாதி ஒழிப்பிற்கு இஸ்லாம்!

இந்தியா பலமொழி பல மாநிலங்கள்; பல மதம் அதில் பல நூற்றுக்கணக்கான சாதிகள் –சாதிகளுக்குள் பல கோத்திரங்கள் போன்ற பிரிவுகளை கொண்ட நாடு.

அவிழ்த்துவிட்ட நெல்லிக்காய் மூட்டையைவிட படு மோசமான நிலையிலிருக்கும் நாட்டில் 'தேசிய ஒருமைப்பாடு பற்றி பேசுவதே ஒரு கேலிக் கூத்து எனலாம். அல்லது மக்களை ஏமாற்றும் அரசியல் நாடகம்" என்றும் கூறலாம்.

சுவர் நன்றாக இருந்தால் தான் சித்திரம் வரைய முடியும். ஆனால் பல ஆயிரம் கீரல்கள் விழுந்து இடியும் தருவாயிலுள்ள சுவரில் சித்திரம் வரைவது எப்படி இயலும்? அதிலும் ஒவ்வொருகீரலுக்கு இடையிலும் ஒறாயிரம் இந்து வெறிபிடித்த கரையான்களும் தேளும் பாம்பும் சீறிக் கொண்டிருக்கிறது. அவ்வாறான சுவரில் சித்திரம் வரைகின் றோம் என கூறுவது எவ்வளவு மடைமையானதோ அதைப் போன்றது தான்

இந்தியாவில் 'தேசிய ஒருமைப்பாடு" என கூச்சலிடுவதும் எனலாம்.

மேலும் சாதி வெறியர்களால் மகாத்மாகாந்தி சுட்டுவீழ்த்தப் பட்ட ஜனவரி 31-ந்தேதி தீண்டாமை ஒழிப்பு நாள் என ஒரு நாள். அதிலும் ஒரு நிமிடம் உறுதிமொழி எடுத்துக் கொள்கின்றார்கள். காந்தி மறைந்த பல ஆண்டுகளாகியும் தீண்டாமையையும் தீண்டாமைக் கொடுமைகளையும் ஒழிக்க முடியாத சோம்பேறிகள் இன்னும் தீண்டாமை ஒழிப்பு நாள் கொண்டாடுவதற்கு வெட்கப்பட வேண்டாமா? காந்தியார் உயிரோடு இருந்திருந்தால் தலித் மக்கள் நன்றாக நான்கு கேள்விகள் கேட்டிருப்பார்கள். மகாத்மா காந்தியும் வெட்கப்பட்டு நாக்கை பிடுங்கி வீசி எறிந்து விட்டு தற்கொலை செய்து கொண்டிருப்பார்.

குடியரசு நாட்டில் இன்னும் "தீண்டாமை". அதை ஒழிப்பதற்கு ஒரு உறுதிமொழி, சமபந்திபோஜனம் என்றெல் லாம் பேச வேண்டிய நிலையிருப்பதற்கு எவனாவது வெட்கப்படுகின்றானா? எனில் இல்லவே இல்லை. எல்லோரும் கூச்சப்படாமல் அவனவன் சாதிப் பெயரை சூட்டிக் கொண்டு பெருமிதமடைகிறான்.

இந்த சாதி வெறியர்களுக்கு மத்தியில் வாழ்வதை விட கோட்டான்கள். ஆந்தைகள் கொடூரமான மிருகங்கள் வாழும் கூட்டில் வாழ்வது எவ்வளவோ மேலானதாகும். கேடு கெட்ட இந்த நாட்டில் பிறந்ததே அவமானத்திலும் அவமானம்!

இருப்பினும் இந்தியா, நமது தாய்நாடு, பார்ப்பன ஓநாய்கள் புகுந்து இந்த நாட்டின் ஒற்றுமையை கடித்து குதறி சின்னாப்பின்னமாக்கிவிட்டது. எவன் சாதிகளையும்

அவற்றில் தீண்டாமை எனும் விஷத்தையும் கலந்துானோ அவனை எப்பாடு பட்டாவது ஒழித்து பழிக்குப்பழி வாங்காதவரை தீண்டப்படாத மக்கள். "தானும் மனிதன்" என கூறுவதற்கு அருகதை யற்றவர்கள் என்றே கருத வேண்டும்.

எனவே முதலில் சாதிகளை ஒழிக்கவேண்டும் சாதிகள் ஒழிந்தால்தான் தீண்டாமை ஒழியும். சாதிகளும் தீண்டாமையும் ஒழிந்தால் தான் இந்தியாவில் ஜனநாயகம் நிலைக்கும். உண்மையான ஜனநாயகம் நிலைத்து வளர்ந்தால் தான் தேசிய ஒருமைப்பாடு காணமுடியும்.

## அதற்கு ஒரே வழி இஸ்லாம் மார்க்கம் ஒன்றுதான்

வேறு எந்த மதத்தாலும் சாதிகளை ஒழிக்க முடியாது தீண்டாமையையும் ஒழிக்க முடியாது. உதாரணத்திற்கு இன்று ஒரு வரை ஒருவர் தாக்கிக் கொண்டிருக்கும் பறையர்கள், வன்னியர்கள், பள்ளர்கள், தேவர்கள், நாடார்கள், சமார் யாதவர் போன்றவர்கள் இஸ்லாம் மார்க்கத்தை ஏற்றுக் கொண்டால் அங்கு சாதி என்ற உணர்விற்கே இடமிருக்காது வெட்கப்படாமல் பெருமையுடன் பெயரோடு ஒட்டிக் கொண்டிருக்கும் தேவர், படையாட்சி, நாய்க்கர், யாதவர், பிள்ளை, முதலாயார், ரெட்டியார் என்ற வால்கள் தானாகவே அறுந்து விழுந்து விடும். யாவரும் ஒரே மனிதர்களாகி விடுவார்கள். அதாவது இஸ்லாம் மார்க்கம் ஒன்றின் மூலமாக மட்டுமே இந்தியாவின் அவமானச் சின்னமாக விளங்கும் பெயரோடு கூடிய சாதி எனும் வாலை அறுத்தெறிய முடியும். அனைத்து சாதியினரும் இஸ்லாமியர்களாகிவிட்டால் சாதிகளும் இருக்காது சாதி சண்டைகளும் இருக்காது.

ஒன்று இந்து மதத்தை வன்முறையின் மூலம் ஒழித்தாக வேண்டும் இந்து மதத்தை ஒழிக்கின்ற போது இந்துக்கள் வெகுவாக பாதிக்கப்படுவார்கள். தலித் மக்களும் பாதிக்கப் படுவார்கள். ஆனால் யாருக்கும் பாதிப்பு இல்லாமல் அன்பு வழியில் அமைதியான முறையில் சாதியை ஒழிக்கவும் தீண்டாமை என்ற உணர்வே இல்லாமல் செய்வதற்கும் இன்றுள்ள அனைத்து சாதிகளும் இஸ்லாம் மார்க்கத்தை ஏற்றுக் கொள்வது அவசியமான ஒன்றாகும். அதன் மூலமே நாம் இந்தியாவில் நிலையான ஜனநாயகத்தை உருவாக்க முடியும் அதைத் தவிர வேறு எந்த வகையிலும் உண்மையான ஜனநாயகத்தை இந்தியாவில் நிலை நாட்டுவோம் என்பது குதிரைக் கொம்பு போன்றது என்றே கூற வேண்டும்.



هذا الكتاب صالح للتوزيع على غير
المسلمين الناطقين باللغة التاميلية



سلسلة مطبوعات المكتب الدعوية ٢

# المساواة في الأديان



الدكتور سيبن

تاميلي

المكتب التعاوني للدعوة والإرشاد وتوعية الجاليات في الصناعية القديمة
هاتف: ٤٤٨٧٩٠٥ أربعة خطوط ناسوخ: ٢٩٥٠٠٠٦
المملكة العربية السعودية ص. ب ٢٥٩٠١٨ الرياض ١١٣٤٢